Thanjavur Sarasvati Mahal Series No. 376

SRI

# SIVARAHASYAM

## VII CHAPTER

## II Part

# ॥ शिवरहस्यम् ॥

॥ उग्राख्ये सप्तमांशे ॥

॥ द्वितीयो भागः ॥







Published by

DIRECTOR

THANJAVUR MAHARAJA SERFOJI'S

SARASVATI MAHAL LIBRARY,

THANJAVUR.



1997] [Price: Rs. 80—00

# BIBLIOGRAPHICAL DATA


| | | |
|---|---|---|
| Title of the Book | ... | SIVARAHASYAM |
| Editor | ... | Thethiyur<br>Sri S. Krishnamurthi Sastrigal |
| Publisher | ... | Director<br>Sarasvati Mahal Library,<br>Thanjavur |
| Publication No. | ... | 376 |
| Language | ... | Sanskrit |
| Edition | ... | Ist Edition |
| Date of Publication | : | July, 1997 |
| Paper used | ... | 14.2 Kg. Seshasayee |
| Size of the Book | ... | 21 x 14 cm. |
| Printing type used | ... | 16 pt. |
| Number of pages | ... | 396 |
| No. of copies | ... | 500 |
| Price | ... | Rs. 80/- |
| Printer | ... | Star Print & Pack, Thanjavur |
| Binding | ... | Card Board |
| Subject | ... | Religion |

तञ्जावूर् सरस्वतीमहालयग्रन्थमालायाः पुष्पम् - सं ३७६

॥ श्रीः ॥

# ॥ शिवरहस्यम् ॥

॥ उग्राख्ये सप्तमांशे ॥

॥ द्वितीयो भागः ॥

सरस्वतीमहालयपण्डितवर्येण

तेदियूर् श्रीकृष्णमूर्तिशास्त्रिणा

संशोध्य

प्रकाशनार्हं कृतम्




प्रकाशितम्-

तञ्जावूर् महाराजाशरभोजीसरस्वतीमहालयेन
प्रकाशितम् ॥

१९९७] [मूल्यम् : रू. ८०-००

# வெளியீட்டாளர் முகவுரை

( சிவரஹஸ்யம் )



"சிவரஹஸ்யம்" என்னும் சம்ஸ்கிருத நூலின் 7-வது அம்சத்தின் (பாகத்தின்) 2-வது பகுதியை சரஸ்வதி மகால் நூலகம் வெளியிடுவது பற்றிப் பெரிதும் மகிழ்ச்சி அடைகிறேன்.

சிவ வழிபாட்டினையும், சிவ நெறிகளையும் வலியுறுத்திக்கூறும் இந்நூல் "சிவாத்வைதம்" பற்றிக் கூறும் நூல்களின் வரிசையில் சேர்ந்த தாகக் கூறலாம். சிவநெறிகளைக் கூறும் முகமாக சிவபெருமானைச் சிறப்பித்துக் கூறி னாலும் ஆங்காங்கு பிரம்மன், திருமால், சிவ பெருமான் எனும் மும்மூர்த்திகளையும் இயக்கும் பரம்பொருளே 'சிவம்' என்றும் அதன் பெருமை அளவிடற்கரியது எனவும் கூறப்படுகிறது.

இவ்விரண்டாம் பகுதியில் கூறப்படும் கருத்துக்கள் தமிழ் முன்னுரையில் பதிப்பாசிரிய ரால் சுருக்கமாகத் தரப்பட்டுள்ளது.

இதனைப் பதிப்பித்த சரஸ்வதிமகால் நூலக மேநிலை சம்ஸ்கிருத பண்டிதர் தேதியூர் திரு. எஸ். கிருஷ்ணமூர்த்தி சாஸ்திரிகள் அவர்களுக்கு நன்றி.

அரிய நூல்களை வெளியிட ஊக்குவிக்கும் நூலக நிர்வாக அலுவலர் திரு. ப சுப்ரமணியன் அவர்களுக்கும், நூலக வெளியீட்டு மேலாளர் திரு. அ. பஞ்சநாதன், எம்.ஏ., எம.எல்.ஐ எஸ்., அவர்களுக்கும் என் நன்றி.

நல்ல முறையில் நூலை அச்சிட்டளித்த தஞ்சாவூர் ஸ்டார் பிரிண்ட் & பேக் அச்சகத்தாருக்கு எனது பாராட்டுக்கள்.

(ஒ-ம்.) து. நா. இராமநாதன், இ. ஆ. ப.,
மாவட்ட ஆட்சியர் / இயக்குநர்,
சரஸ்வதி மகால் நூலகம்,
தஞ்சாவூர்.

தஞ்சாவூர்,
5—7—1997.



உ

சிவமயம்

# முன்னுரை



உலகின் பிறநாடுகளில் நாகரிகமும், நெறிமுறைகளும் மலராமல் அறியாமை இருள் சூழ்ந்திருந்த காலத்திலும் ''கர்மபூமி'' யெனப்படும் பாரதநாடு - முதிர்ந்த நாகரிகச் சிறப்புடனும், பண்பாடு, நெறிமுறை, மொழி யறிவு, இலக்கிய அறிவு இயல், இசை, நாடகம், சித்திரம், சிற்பம், கட்டிட வடிவமைப்புத்திறன் போன்ற கலையறிவு - இறையுணர்வு இன்னபிறச் சிறப்புக்களுடனும் சிறப்புற்றிருந்தது என்பது யாவரும் அறிந்ததே.

வேத நெறிகளிலும், இறை வழிபாடடிலும் உலகின் பிற நாடுகளுக்கு காலம்காலமாகவே நம்நாடு வழிகாட்டியாக இருந்து வந்திருக்கிறது. நம்நாட்டில் உள்ளதுபோன்ற - விரிவான - நுட்ப மான சமயச் சுதந்திரம் உலகில் எந்தச் சமயத்திலும் இல்லை. பாரதத்தில் இமயம் முதல் குமரி வரை சைவநெறி பரந்துள்ள தெனினும் தென்னாட்டில் அதுவும் தமிழகத்தில் சைவநெறி தழைத்துள்ளதுபோல் வேறெங்கிலும் சிறப்புடன் விளங்கவில்லை யெனலாம். ''தென்னாடுடை சிவனே போற்றி'' என்ற வழக்கும் இதனை உறுதிசெய்கின்றது. சைவம் வளர்த்த அறுபத்து மூன்று சமயக்குரவர்கள் தோன்றிய தமிழகத்தில்தான் சைவ ஆகமங் களும் - அவ்வழிவந்த பூசை முறைகளும் இன்றளவும் தழைத்து விளங்குவதாகும். சைவ சமயச் சிறப்புப்பற்றி சிவாகமங்களும் சிவபுராணம், கந்தபுராணம், திருமுறைகள் முதலானவை.

எழுதாக்கிளவி, யெனப்படும் வேதங்கள் போல் உலகுள்ளளவும் நிலைத்திருப்பவையாகும்.

சைவ சமயச் சிறப்புபற்றி பதினெட்டு புராணங்களில் ஒன்றான ஸ்கந்த புராணத்தில் "சிவரஹஸ்யம்" என்ற பகுதி விரிவாகக் கூறுவதாகும். இதேபோன்று ஸம்ஸ்க்ருத மொழியில் அமையப்பெற்ற "சிவரஹஸ்யம்" எனும் மாபெரும் தனி நூலும் சிவ தத்துவம்பற்றி விரிவாகக் கூறுவதாகும். இதன் ஆசிரியர். யார் என்று நூலில் எவ்விடத்திலும் கூறப்படவில்லை.

ஒரு லக்ஷம் ஸம்ஸ்க்ருத ச்லோகங்கள் கொண்ட மாபெரும் இதிஹாஸமான மஹாபாரதம் பற்றிய ஒரு பழமொழி உண்டு. இந்த நூலில் கூறப்படும் தர்ம தத்துவங்கள், ரகஸ்யங்கள் பலவும் பிறநூல்களில் காணப்படலாம். ஆனால் இதில் (மஹாபாரதத்தில்) காணப்படாத (கூறப்படாத) தர்ம ரஹஸ்யம் எதுவும் பிறநூல் களில் இருப்பதற்கில்லை என்ற கருத்துள்ள

"यदिहास्ति तदन्यत्र यन्नेहास्ति न तत् क्वचित्"

எனும் வாக்கின்படி இந்த நூல் முழுவதிலும் சைவநெறி சம்பந்த மான உயர்ந்த கருத்துக்கள் பலவும் சிறப்பாகக் கூறப்பட்டுள்ளன. ஒரு லக்ஷத்தி இருபதினாயிரம் ஸம்ஸ்க்ருத ச்லோகங்கள் கொண் டுள்ள இந்தநூல் நமது ஸரஸ்வதி மஹால் நூலகத்தில மட்டுமே முழுமையாகக் கிடைக்கக்கூடியதாகும்.

சிவபெருமானின் பன்னிரண்டு பெயர்களைக்கொண்டு பன் னிரண்டு அம்சங்களாக (பகுதிகளாக) இந்நூல் பிரிக்கப்பட்டுள்ளது. 1. மாஹேச்வர, 2. பவ, 3. ஹர, 4. சிவ, 5. பர்க, 6 சங்கர 7. உக்ர, 8 பீம, 9 சதாசிவ, 10 ஈச்வர,

11. மஹாதேவ, 12. ஈச என்ற பெயர்களுடன் 12 பகுதிகளாக வுள்ள இந்நூலின் ஒவ்வொரு பகுதியிலும் சிவதத்துவங்கள் மிக அழகிய பலவித் சந்தங்களுடன் - இலக்கியநயம், சொல்நயமுடன் விளங்கும் ஸம்ஸ்க்ருத ச்லோகங்களால் விளக்கப்படுகின்றன.

இந்த நூலின் முதல் இரண்டு பாகங்கள் (மாஹேச்வர, பவ எனும் அம்சங்கள்) மட்டும் 1913-ம் ஆண்டில் சென்னையைச் சேர்ந்த செல்வந்தரும், சிவநெறிச் செம்மலுமாக விளங்கிய சதாசிவ செட்டியார் என்ற அன்பரால் வெளியிடப்பட்டுள்ளன. அவைகளும் இந்நாட்களில் கிடைப்பதற்கு அரிதாகவுள்ளன.

கடந்த 1971-ம் ஆண்டில் நமது நூலகத்தில் அச்சிட்டு வெளியிடப்பட்ட 3, 4, 5, 6 அம்சங்கள் தஞ்சை ஸ்ரீஸ்வாமிநாத ஆத்ரேயர் எனும் ஸம்ஸ்க்ருதப் பேராசிரியர் அவர்களால் சிறந்த முறையில் பதிப்பிக்கப்பட்டுள்ளன.

மீதமுள்ள பகுதிகளை (7 முதல் 12 முடியவுள்ளவை)ப் பதிப்பிக்கும் பணி 1991-ல் முன்னாள் மாவட்ட ஆட்சியரும், நூலக இயக்குநரு(பொ)மான திரு ஷண்முகராஜேச்வரன் அவர்களால் எனக்களிக்கப்பட்டது. பிழைகளைத் திருத்தம் செய்து பதிப்பிக்கும் பணி அதுமுதல் இரண்டு ஆண்டுகளில் முடிக்கப்பட்டது.

முதல் அம்சத்தில் — சிவபெருமானைக் குறித்துக் கடும் தவம்செய்த ஜைகீஷவ்ய முனிவர் சிவனருள்பெற்று கந்தப் பெருமானை சேவித்தல், சிவநெறிகள்பற்றி பார்வதிதேவியிடம் சிவபெருமான் அருளிச்செய்ததை உடனிருந்து செவியுற்ற கந்தப் பெருமானிடம் சிவதத்துவம்பற்றி விரிவாகக் கூறும்படி ஜைகீஷவ்யர் வேண்டுதல் - நந்திகேச்வரர், ப்ருங்கி முதலான சிவகணத்தைச் சேர்ந்தோரும் திருமால் முதலான தேவர்களும், முனிவர்களும் அடங்கிய

அவையில் கந்தப்பெருமான் சிவரஹஸ்யக் கருத்துக்களைக் கூறுதல் ஸத்யோஜாதம் - வாமதேவம், அகோரம் - தத்புருஷன் நசானன் எனும் பஞ்சப்ரம்மங்கள் செய்த சிவஸ்துதி - கைலாய வருணனை முதலான கருத்துக்களும்

இரண்டாம் பகுதியில் — பார்வதிதேவி தவமியற்றுதல் சிவபெருமான் அருள்புரிதல். சிவகைலாயம் போன்று பராசக்திக் கென "சிந்தாமணி த்வீபம்" அமைத்தல் - பராசக்தியின் தனி வாசஸ்தானமாக அமைக்கப்பட்ட சிந்தாமணி த்வீப வருணனை, துர்வாஸ முனிவரின் தவம் - சக்தி தத்துவ விளக்கம் - ஆகியவையும்

மூன்றாவது பகுதியில் — காயத்ரீயின் தவம் - சிவவழி பாட்டின் சிறப்பு - மேரு மலையின் சிறப்பு - வில்வமரத்தின் பெருமை சிவபூஜை மகிமை பற்றியும்

நான்காவது பகுதியில் — நந்திகேச்வரர், சண்டேசப் பெருமான், ப்ருங்கி மார்க்கண்டேயர், அகஸ்தியர் முதலானோருக்கு சிவபெருமான் அருள் புரிதல்

ஐந்தாவது பகுதியில் — கேதாரேச்வர; ஓங்காரேச்வர வைத்யநாதம் - குஸ்ருணேச்வர - நாகநாத - மஹாகால - பீம - த்ரியம்ப கேச்வர - விச்வநாத - ஸ்ரீசைல, கோகர்ண - ராமேச்வர எனும் தலங் களில் உள்ள பன்னிரண்டு ஜோதிர்லிங்க வருணனைகளும்.

ஆறாவது அம்சத்தில் — மஹாபாரதத்தில் பகவத்கீதை போன்று - வேதாந்த உபநிடதக் கருத்துக்களடங்கிய ருபு கீதையும் கூறப்பட்டுள்ளன.

இப்பொழுது பதிப்பிக்கப்படும் இந்த 7-வது அம்சத்தில் முக்திபெருவதற்கு சாதனமாகவுள்ள சிவதர்மங்களைக் கூறும் முக

மாக சிவபெருமானே பார்வதியிடம் கூறிய ஆயிரம் சிவநாமங்கள் (சிவஸஹஸ்ரநாமம்)

7-வது அம்சத்தின் 12-வது அத்யாயம் முடியவுள்ள பகுதிகளில் கூறப்பட்டுள்ள விபரங்கள் முதல் பாகத்தில் கூறப்பட்டுள்ளன.

13-வது அத்யாயம் முதல் 19-வது அத்யாயம் முடியவுள்ள பகுதி இரண்டாம் பகுதியாக இப்பொழுது அச்சிடப்படடுள்ளது. 13-வது அத்யாயத்தில் 634 ச்லோகங்கள் உள்ளன. இந்தப் பகுதியில் கூறப்பட்டுள்ள கருத்துக்கள் பின்வருமாறு —

**13**-வது அத்யாயம் — சூத முனிவரை நோக்கி சௌனகாதி முனிவர்கள், முனிவரே! காசித்தலமகிமைபற்றி எங்களுக்கு மிகுந்த முயற்சியுடன் கூறியது கேட்டதும் எங்களுக்கு அமுதத்தைப் பருகியதால் ஏற்படும் இன்பத்தைவிடப் பேரின்பம் ஏற்பட்டது காசித்தலத்தை அடைவதற்கான தகுதிகள் பற்றிக் கூறுங்கள் எனக் கேட்டனர்.

சூத முனிவரும் - சிவ பார்வதி சம்பாஷணையின் பொழுது உடன் இருந்து கேட்டறிந்த முருகப்பெருமான் ஜைகீஷவ்யர், நந்தி கேசர், ப்ருங்கி முதலான சிவகணநாயகர்களுக்கும், திருமால்போன்ற தேவர்களுக்கும் கூறியதைக் கூறுகிறார் —

காசித்தலம் பற்றி இவ்வளவு ஆர்வமுடன் கேட்க விரும்பும் நீங்கள் பாக்கியசாலிகள். திருநீறு தரித்து, ருத்ராக்ஷம் அணிந்து, சிவ பஞ்சாக்ஷரம் (வேதமறிந்தவராயின் ஸ்ரீருத்ரம்) கூறியவாறு சிவ பூஜை செய்வதால் எல்லாவிதமான விருப்பங்களும் நிறைவுபெறும். சிவபெருமானுக்கு பக்தியுடன் அஷ்டாங்க நமஸ்காரம்தான் செய்ய வேண்டும். அதைவிடுத்து பாதி நமஸ்காரம், பாவனையாக நமஸ்காரம்செய்வது ஒருவனுடைய எல்லா புண்ணியங்களையும்

அழித்து' அவனை பாபியாக்கிவிடும். சிவனடியார்களை அறுசுவை உணவளித்து உபசரித்தல், முறையாகச் சிவவழிபாடு செய்வதின் பயனை அளிக்கும் சிவனடியார்களை அவமதிப்பது பெரிய சிவாபராதம் ஆகிவிடும்.

சிவ வழிபாடு செய்வோருக்குக் காசித்தலம் செல்வது எளிதாகிவிடுகிறது. சிவனையும், சிவத்தலங்களையும் வேறுபடுத்திக் காணலாகாது. காசித்தலம் அடைவதற்கான தகுதிகள்பற்றி சிவபெருமான் பார்வதியிடம் கூறியவற்றை கூறுகிறேன் கேளுங்கள் -

சிவபெருமான் :— தேவி ! இடையறாது என்னை வழிபடுவதும், சிரத்தையுடன் செய்யப்படும் பஞ்சாக்ஷர மந்த்ர ஜபமும் (வேதமுணர்ந்தோராயின் ஸ்ரீருத்ர மந்திரஜபமும்)தான் காசித்தலத்தை அடைவதற்கான முக்ய சாதனம் ஆகும். காசித்தலத்தை அடைவது மிகவும் எளிது ; அதே சமயம் மிகவும் கடினமானதும் ஆகும். என்னை, எனது அடியார்களை பக்தியுடன் வழிபடுவது காசித் தலத்தை அடைவதற்கு எளிய சாதனமாகும் என்னைப் பிற தெய்வங்களுக்குச் சமமாகப் பாவித்தல், என்னை வழிபட்டுவிட்டு எனது அடியார்களை அவமதிப்பதுபோன்ற செயல்களைச் செய்வோர் எத்தனைப் பிறவிகள் எடுத்தாலும் காசித்தலத்தை அடையமுடியாது. விஷ்ணு, பிரம்மாதியர் அனைவரும் காசித்தலம் அடைவதற்கென இமயமலைச் சாரலில் என்னைக்குறித்துப் பல்லாண்டுகள் தவமிருந்தனர்.

ஒருசமயம் கண்வமுனிவர், காச்யபர் என்ற முனிவரை அணுகிப் பின்வருமாறு கேட்டார். முனிவரே ! இல்லற வாழ்க்கையில் பெரும் துயரங்களை அனுபவிக்கும் மனிதர்களுக்கு இல்லறத் தளையிலிருந்து விடுபடுவதற்கான உபாயம் யாது ? அதற்கென எந்த தெய்வத்தை தியானித்தல் வேண்டும் ? பூஜித்தல் வேண்டும் ?

எனக்கேட்க காசியபர் கூறியதாவது - வேத வேதாந்த நூல்கள் யாவுமே ஒருமுகமாகச் சிவமெனும் மாபெரும் சுடரொளிபற்றியே கூறுகின்றன என்றும், நிலையான - அறிவு வடிவான - ஆனந்த வடிவான சத் சித் ஆனந்த வடிவான பேரொளிப் பெருமானே சிவம் எனப்படும். சிவத்தை வழிபட்டவர்கள் பிறவி - இறப்பு எனும் சுழலி னின்றும் விடுபடுகின்றனர். பெரும் புண்ணியத்தின் பயனாகவே சிவபக்தி ஏற்பட முடியும். சிவவழிபாடு "இப்படித்தான் செய்ய வேண்டும்" என்று வரையறுக்கப்படவில்லை. திருநீறு, ருத்ராக்ஷ மரங்கள், வில்வ மரங்கள் எங்குள்ளதோ, எங்கு சிவனடியார்கள் உள்ளனரோ அதுவே உயர்ந்த சிவத்தலமாகும். சிவ வழிபாடு செய்யாதவரையில் முக்திநிலை பெறுவது சாத்தியமேயில்லை.

ஒருசமயம் திருமால் ஆதிவித்யாஸ்வருபிணியான ஈச்வரியை வணங்கி 17 சுலோகங்களால் துதித்தார்

जय मातः प्रसीद त्वं जय मातः शिवप्रिये
जयमातः कृपापूर्णे जयमातः परात्परे ।
किं ध्यायते त्वया देवि ध्यातव्यं तव किं शिवे ।

பிரபஞ்சங்கள் அனைத்துக்கும் தாயாகிய, சிவத்தின் அன்பிற்குரிய, கருணைமிகுந்த - உயர்வானவற்றிற்கெல்லாம் மேலான தாயே ! நீ ஏதோ தியானத்தில் இருக்கிறாயே ! எதனை தியானம் செய்கிறாய் ! உலகோரால் தியானிக்கப்படும் நீயே மூன்றை தியானிக்கவேண்டிய அவசியம் என்ன ! உன்னால் தியானிக்கப்படுவது எது ? எனக் கேட்க ஈச்வரி கூறுவாள் - "நான் சிவத்தின் ஒருபகுதியாக ஆக விரும்பியே தவத்தை மேற்கொண்டேன். எனக்கு இதுகாறும்

அதற்கான வழியேதும் புலப்படவில்லை. நீங்கள்தான் சொல்லுங்களேன்'' எனக்கேட்க திருமால் கூறுவார் - தாயே ! நீங்கள்வேறு, சிவம் வேறல்லவே ! எனினும் கேட்டதால்சொல்கிறேன். மஹாதேவனுக்கு எண்ணற்ற பெயர்கள் உண்டு. அவற்றை எல்லாம் சொல்ல முயற்சிப்பது மிகவும் கடினம். எனவே சிவபெருமானுக்கு மிகவும் பிடித்தமான நூறு நாமங்களைச் சொல்லுகிறேன் ; கேளுங்கள். இந்த சிவ நாமங்களைச் சொல்வதால் சிவவழிபாட்டினை முறையாகச் செய்ததின் பயனையும், சிவனின் திருவருளையும் பெறமுடியும்'' என்று கூறி ''ஓம் சிவோ மஹேச்வர: சம்பு:'' எனத் தொடங்கி ''பரமேச்வர' எனும் சொல்முடிய சிவ நாமங்களைக் கூறி அவற்றைச் சொல்வதால் ஏற்படும் நற்பயன்கள் பற்றியும், கூறுகிறார். ஈச்வரியும் அந்த நாமங்களைச் சொல்லி, சிவனை வழிபட்டாள். அதுசமயம் திருமால் மேலும் கூறுகிறார் - தாயே ! புஷ்பதந்தன் எனும் கந்தர்வன் சிவனை ஒருமுகப்படுத்தப்பட்ட மனத்துடன் தியானித்துத் தவம் செய்து வந்தான் கடும் தவம் செய்வோரைக்கண்டு பயப்படும் பழக்கமுள்ள ப்ரம்மாதி தேவர்கள் என்னிடம் வந்தனர். ''தேவர்களே, புஷ்பதந்தன் செய்யும் கடும்தவம் உங்களைக் கலவரப்படுத்தியுள்ளது. புஷ்பதந்தன் தேவர் உலகில் எந்தப்பதவி பெறுவதற்காகவும் தவம் செய்யவில்லை, சிவகணத்தில் ஒருவனாக ஆக விரும்பியே தவம் செய்கிறான். கவலைநீங்கிச் செல்லுங்கள் என்றுகூறி அனுப்பினேன்

புஷ்பதந்தனின் கடும் தவத்தினால் மகிழ்ந்த சிவனும் அவன் முன் தோன்றியதும் புஷ்பதந்தன் கைகூப்பி, வணங்கி மிக உயர்வான கருத்துக்கள்கொண்ட பல ஸம்ஸ்க்ருத ஸ்லோகங்களால் சிவனைத் துதித்தான் -

महिम्नः पारं ते परमविदुषो यद्यसदृशी
स्तुतिर्ब्रह्मादीनामपि तदवसन्नास्त्वयि गिरः ।

अथावाच्यः सर्वः स्वमतिपरिणामावधि गृणन्
ममाप्येष स्तोत्रे हर निरपवादः परिकरः ॥

(சிவமஹிம்ன ஸ்தோத்திரம்)

சர்வேச்வர, எல்லைக்குட்படாத உனது சிறப்புமிக்க பெருமைகளைப்பற்றி ஏதும் அறியாதவர்கள் செய்யும் துதிகளை ஏற்றுக்கொள்வதில்லை என்று உம்மிடம் ஏதேனும் நியதி (கட்டுப்பாடு) உள்ளதா ! அப்படி ஏதும் இருந்தால் உம்மைத் துதிக்கப்புகும் எனக்குக் கவலையில்லை. விஷ்ணு ப்ரம்மாதியர்களுக்கும், எனக்கு ஏற்பட்ட நிலைதான் ஏற்படும். ஏனெனில் உனது பெருமைகளை அவர்களும் அறியாதவர்கள்தானே '' - அப்படிக்கெல்லாம் இல்லை, அவரவர் தத்தம் அறிவுத்திறனுக்கு ஏற்ப துதித்தால் அதனையும் நான் ஏற்றுக்கொள்வேன் என்று தங்களுக்கு எண்ணம் இருந்தால் தங்களைப் புகழ்ந்து துதிக்கும் என்து முயற்சிக்கும் அங்கீகாரம் கிடைத்துவிடும்'' என்பது முதல் ச்லோகத்தின் கருத்து. இவ்விதம் புஷ்பதந்தன் செய்த துதியால் மகிழ்ந்த சிவபெருமான் அவனைச் சிவகணத்தில் ஒருவனாக இணைத்துச்கொண்டார். புஷ்பதந்தன் இயற்றிய இந்தத்துதி "சிவமஹிம்னஸ் ஸ்தோத்ரம்" ஸம்ஸ்க்ருத அறிஞர்களிடையே மிகவும் புகழ்பெற்றதாகும் இதுபற்றிய பழமொழி ஒன்று ஸம்ஸ்க்ருதத்தில் உண்டு —

"महेशान्नापरो देवः महिम्नो नापरा स्तुतिः ।
अघोरान्नापरो मन्त्रः नास्ति तत्वं गुरोः परम् ॥

"மகேசனைக் காட்டிலும் உயர்ந்த தெய்வமில்லை சிவமகிம்ன ஸ்தோத்ரத்தைவிட உயர்ந்த சிவஸ்துதியும் இல்லை. சிவனைக்

குறித்த அகோராஸ்திர மந்திரத்தைக்காட்டிலும் சிறந்த மந்திரமும் இல்லை. குருநாதனைக்காட்டிலும் சிறந்த தத்துவம் இல்லை ”

கண்வ முனிவரிடம் கச்யபர் மேலும் கூறுகிறார் “ ஒரு சமயம் திங்கள்கிழமை கூடிய பிரதோஷ தினத்தில் (சோம வாரப் பிரதோஷநாளில்) திருமால் முதலானோர் சிவபூஜை செய்ய மறந்தனர். அதன் பயனாக லக்ஷ்மீதேவி திருமாலை விட்டுவிடடுக் கடலில் வீழ்ந்துவிட்டாள். (பிறந்த இடத்திற்குச் சென்றாள்) லக்ஷ்மீ மறைந்ததும் இந்திரனிடம் இருந்த ஐராவதமெனும் யானை, “உச்சைசிரவஸ்” எனும் குதிரை, கற்பக மரங்கள் யாவும் சுவர்க்கத்தைவிட்டுச் சென்றுவிட்டன. அச்சமயம் அகஸ்திய முனிவர் - தேவர்களே ! சோம பிரதோஷ நாட்களில் சிவ வழிபாடு செய்யாததின் பலன் இது, இப்பொழுதாவது உணர்ந்தீர்களே ! என்று கூற, திருமால் முதலானோர் சிவனை வழிபட்டுவிட்டு கடலைக் கடைய முற்பட்டனர். திடீரென்று கடலினின்றும் 'காலகூடவிஷம்' தோன்றவே ; உலகம் பெரும் துயருக்குள்ளாயிற்று. மறுபடி தேவர்கள் அகஸ்தியரின் அறிவுரைப்படி, சிவபெருமானைத் துதித்து வழிபட்டனர். ஈச்வரியின் கருணையால் சிவபெருமான் காலகூட விஷத்தை அருந்த “உலகம் துயரிலிருந்து மீண்டது” எனக் கூறி காச்யபர் மேலும் கூறினார் -

ஒருசமயம் நாரதர் எதேச்சையாக சத்யலோகம் சென்றார். பிரம்மதேவர் நாரதரிடம் “எந்த எந்த இடங்களுக்குச் சென்றாய் அவற்றின் முக்யத்துவம் (சிறப்பு) யாது ?” எனக்கேட்க - நாரதர் தாம் சென்றுபார்த்த பல இடங்களைப்பற்றிக் கூறியபோது காசித்தலம் சென்ற விபரம் கூறவில்லை. அதுகேட்ட பிரம்மதேவர் காசித்தல மகிமை யறிந்தவராதலால், நாரத ! எங்கெல்லாமோ சுற்றி அலைந்தாயே தவிர பெருமைபொருந்திய காசித்தலத்திற்கு நீ செல்லவில்லையே ! ஆனால் காசித்தலம் செல்வது அவ்வளவு

எளிதன்று. பக்தியுடன் சிவபூஜை செய்தாலன்றி காசித்தலம்செல்லும் நற்பேறுகிட்டாது. வருகிற கார்த்திகை மாதத்திய நான்கு சோமவாரங்களிலும் (திங்கள்கிழமைகளிலும்) உணவருந்தாமல் விரதமிருந்து இரவு (விரதம் என்பதன் பொருள் உணவு அருந்தாமையேயாகும்) உரிய நேரத்தில் சிவபூஜை செய். சிவனுக்குப்பிடித்த நாட்களில் சிவபூஜை செய்தால் சிவனருள் கிட்டும் இன்றைக்கே "கேதாரம்" சென்று சிவபூஜையை பக்தியுடன்செய். நானும் இவ்வாறு சிவபூஜை செய்த புணயப்பயனாகவே காசிததலம் செல்லமுடிந்தது எனக்கூறிய கருத்துக்களை நாரதர் இமவானுக்குக் கூறியதாக கச்யபர் கண்வ முனிவருக்கு உரைத்தார். காச்யபர் மேலும் கூறியதாவது - நாரதர் ஹிமவானிடம் சிவமகிமையைப்பற்றிக் கூறிவிட்டு மேலும் ஒரு செய்தி கூறினார்.

சதர்ச்சனர் எனும் முனிவர் சிவதீக்ஷைபெற்று முக்திபெற விரும்பி சிவ வழிபாடு செய்தார், சிவத்துதியும் செய்தார். இந்த 21 துதிகளின் பயனாகவும் - ஸ்ரீருத்ரம் முதலான வேதப் பகுதிகளை முறை தவறாமல் ஓதியதின் பயனாகவும் - விரும்பிய பலனை (ஜீவன் முக்திநிலையை) அடைந்தார் காசியப முனிவர் தேவர் தேவர்களிடையே நடந்த உரையாடல் தொடர்ந்து ஓங்காரபற்றிக் கூறியதாவது "தேவர்களே, உங்களுக்கெல்லாம் தலைவனும், தந்தையுமாக உள்ளவர் மஹாதேவன்|ஆவார். அவர் த்ரிபுரம் எரித்தவர் என்றும் வேத ஜனகர் (?) என்றும் சொல்லப்படுகிறார்.

"यः पिता भवतां देवाः स एव शिव.उच्यते ।

स एव श्रीमहादेवः स एव त्रिपुरान्तकः ।

स एव वेदजनकः .... .... ।[1]

என்றுகூறி சிவத்தலங்களில் தங்கி வழிபடுவதால் முக்திநிலையும் பெறலாம் என்று கூறினார். யார் யார் வேதத்தில் நம்பிக்கையுள்ளவர்கள் என்பதற்கான இலக்கணமும் கூறி எனது அருள் இருந்தால்தான் என்னை அறிய இயலும் என்று கூறப்பட்ட செய்திகேட்ட தேவர்கள் சிவவழிபாடு செய்தனர்.

**14**-வது அத்யாயம் — இதில் சௌனகாதி முனிவர்கள் சூதமுனிவரிடம் "உண்மையில் சிறிதும் சுவையில்லாத - (ஸாரம் இல்லாத) சுவை உள்ளதுபோல் தோன்றுகிற இல்லறத்தில் உழல்வது கர்மவினைப்பயன் அல்லவா ! ஆனால் ஸம்ஸாரம் (இல்வாழ்க்கை) என்பது பெரும் காட்டுத்தீயின் வெப்பத்தைப்போல் துயர்களைத் தரவல்லதாகவுள்ளது. தோன்றி மறையும், நிலையில்லாத இல் வாழ்வில் சிறிதும் 'ஸாரம்'' இல்லை, சுகம் இல்லையென்ற உறுதியான உணர்வு எவ்வாறு ஏற்படும்? - அவ்வாறான அறிவைத் தருவது யாது ? என்று வினவ - சூதமுனிவர் கூறுவது — கைலாயநாதனாகிய சிவபெருமான் ஒருஸமயம் நந்திகேசரை அழைத்து "சிவயோக நிலையில் ஈடுபட்டுள்ள முருகனைக் கண்டுவா

---

1 இங்கு दर्शनादभ्रसदसि जननात् कमलालये । काश्यां तु मरणान्मुक्तिः स्मरणाद् अरुणाचले ॥ "சிதம்பரத்தில் தர்சனத்தாலும், திருவாரூரிலும் பிறவியெடுத்தலாலும், காசித்தலத்தில் மரணம் ஏற்பட்டாலும், அருணாசலேசனை நினைத்தாலும் முக்தியே" ஏற்படும்.

எனக்கூறி அனுப்பினார். நந்திகேசனும் புறப்பட்டு - வழியில் காசித்தலம் கண்டு மணிகர்ணிகை என்ற நீர்நிலையில் இறங்கி மும்முறை நீர் அருந்தி (ஆசமனம்செய்து) ஆகா ! அமுதத்தைப் பழிக்கும் நீரல்லவா இது என மகிழ்ந்து, தங்கமயமான குடத்தில் நீர் எடுத்துச் சென்று சோதிவடிவான விச்வேச்வரனுக்குப் பாலாலும் - நீராலும் தாமே அபிஷேகம் செய்து வழிபட்டு மகிழ்ந்தார். பிறகு ஸ்ரீசைலம் சென்று முருகனைக்கண்டு வணங்கியபொழுது அவரை முருகன் வரவேற்று உபசரித்து "எங்கிருந்து வருகிறீர் ? சிவனே சரணம் என்றுள்ள உம்மைக்கண்டு பெரிதும் மகிழ்கிறேன். சிவனை இதயத்தில் தாங்கியுள்ள சிவனடியார்கள் வடிவில் சிவபெருமானே ஸஞ்சாரம் செய்கிறார். சிவதரிசனமே எல்லா மங்களங்களையும், சுகபோக வாழ்க்கையையும், முக்தியுணர்வையும் அளிக்கவல்லது. கடும் தவமியற்றல், சிறந்த பொருள்களைத் தானம் செய்தல் போன்றவற்றால் மட்டுமே சிவபக்தி ஏற்படமுடியும் எனக்கூற நந்திகேசனும் உண்மை ! முற்றிலும் உண்மை !! சிவ தத்துவம்பற்றி - உம்மையும், சிவனையும்தவிர வேறு எவர்தான் அறிய இயலும் என்று கூறி சிவத்தலங்களின் பெருமைபற்றிக் கூறுமாறு கேட்க முருகப் பெருமான் - "ஸ்ரீசைலம்" தலத்தின் மகிமையைக் கூறும்வாயிலாக அத்திரி முனிவரின் வரலாறு, அவர் செய்த தவத்தின் பயனாகச் சிவனருளால் 16 கலைகள் உள்ள சந்திரனைக் குமாரனாகப் பெற்றார் (அத்ரிமுனிவருக்கு சந்திரன் தவிர துர்வாசர், தத்தாத்ரேயர் எனும் இருகுமாரர்களும் உண்டு) திருமால் செய்த தவத்தின் பயனாக வைகுண்டத்தையும், ப்ரம்ம தேவர் செய்த தவப்பயனாக சத்தியலோகத்தையும் தம் உறைவிடங்களாகப் பெற்றார்கள். இந்திரன், அக்னி முதலானோர் எட்டுத் திசைகளின் அதிபதிகளாக ஆயினர். ஆதலின் எல்லா தேவர்

களைக்காட்டிலும் சிவனே மேலானவர் என்றுகூறி வேதப்பாமாணங் களைக்கொண்டு சிவதத்துவ விளக்கமும் அளித்தார்.

அதைத்தொடர்ந்து தக்ஷயாக வாலாற்றைக் கூறும் முகமாக சிவனார் அனுமதிபெற்று தக்ஷயாகத்திற்குப் புறப்பட்ட 'ஸதி' தேவியை (ஸதி - தக்ஷனின் குமாரியாகத் தோன்றி சிவனை மணந்தவர்) தேவர்கள் மிகயுயர்ந்த விதத்தில் துதித்தனர்

"नमो देव्यै नमो देव्यै नमो देव्यै नमो नमः" ।

(நமோ தேவ்யை நமோ தேவ்யை நமோ தேவ்யை நமோ நம:)

எனத்தொடங்கி தோவீமாகாத்மியத்தில் 10-வது அத்யாயத்தில் தேவர்கள் துதிப்பதுபோல் துதித்தனர்.

யாகசாலை சென்ற ஸதீ தேவியை தக்ஷன் சிவனிடம் உள்ள துவேஷத்தால் - அவமதித்தல், ததீச முனிவர் தக்ஷ னின் செயலைத் தவறு எனக் கண்டித்தல், சிவமகிமை பற்றிக் கூறுவதுகேட்டு தக்ஷன் சிவனை மேலும் நிந்தித்தல் திருமாலும் தக்ஷனுக்கு அறிவுரை கூறுதல் - வீரபத்திர அவதாரம் சிவபெருமான் - வீரபத்திரனிடம் சிவதுவேஷிகளையும், தக்ஷனை யும் அழித்துவிட்டு வருமாறுகூற - வீரபத்ரன் - தம் பரிவாரங்க ளுடன் (அவர்கள் பயங்கரத் தோற்றமுள்ளவர்கள்) தக்ஷனின் யாகசாலையில் தோன்றுதல் - யாகத்தையும் - யாகத்தில் பங்கு பெற வந்திருந்த தேவர்களையும் அழித்துவிட்டுக் கிளம்புதல் பற்றியும், கோபங்கொண்ட சிவபெருமான் திருமாலையும் பிற தேவர்களையும் வைகுண்டபதவியிலிருந்தும், தேவர்கள் வகித்த பதவிகளிலிருந்தும் விலக்கி, மிகமிகச் சாதாரணமாகவுள்ள யார் யாருக்கெல்லாமோ அப்பதவிகளை வழங்குதல் பற்றியும் - கூறி தாரகாசுரன் - சூரபத்மன் முதலானோர் மூலமாக ஏற்பட்ட துயரங் களை சிவகுமாரனால்தான் விலக்கமுடியும் என்றுணர்ந்து, வருணன்

முதலானோரை அழைத்து யார்யாருக்கு என்ன தகுதி உள்ளது என்று கூறுமாறு இந்திரன் கேட்க மன்மதன் தன்னால் - தனது அஸ்திரங்களை - (மலர்க்கணை)க்கொண்டு யோகியர்களையும் வயப் படுத்த முடியும். இதுநாள் வரையில் சிவபெருமானைத் தவிர்த்த எல்லா தேவர்களிடமும் எனது கணைகளைச் செலுத்தி வெற்றி பெற்றிருக்கிறேன் எனது அஸ்திரங்களை (மலர்க்கணைகளை) சிவபெருமானிடம் செலுத்தியதில்லை. ஆனால் அவர்மீதும் என் கணைகளைச் செலுத்தி வெற்றிகாணமுடியும் என்று தற்பெருமை யுடன் கூறவே, இந்திரன் அதனைப் பயன்படுத்திக்கொண்டு, தவமியற்றும் சிவபெருமான்மீது உன் திறமையைக் காண்பி - எனத் தூண்டுதல் செய்யவே மன்மதன் சிவபெருமான்மீது மலர்க்கணை களை எய்து அதன்பயனாகச் சாம்பலானான் எனக்கூறி சிவவழிபாடு ஒன்றுதான் சௌபாக்யம் - குறைவில்லாத சுகம், முக்திநிலை அளிக்க முடியும் என்று விவரிக்கப்படுகிறது.

15-வது அத்யாயத்தில் — சிவபூஜை செய்வது எப்படி, அதற்குத் தேவையான சாதனங்கள் யாவை எனப் பார்வதி சிவனிடம் கேட்க - இதே கேள்வியை நந்தியம்பெருமான் கேட்டபொழுது அவர் எதைக் கூறினாரோ அதேவிதமாக பதில் கூறுகிறார் எந்த வீட்டில் (சிவபூஜை) சிவலிங்கம் இல்லையோ, அந்த வீட்டில் உணவுஅருந்தலாகாது யார் எந்த தெய்வத்திற்கு வழிபாடு செய்தா லும் அப்பூஜை எனக்கே செய்யப்பட்டதாக ஆகிறது

ஒரு சமயம் சமுத்ரராஜன் சிவனைக்குறித்துத் தவம்செய்த பொழுது அதன் வேகத்தால் சகல உலகமும் துயருற்றன. தேவர் கள் வாடிய முகத்துடன் பிர்ம்மதேவனை அணுகி செய்தியைக் கூறவே, ப்ரம்மதேவன், "தேவர்களே ! சிவவழிபாடு செய்யுங்கள் சிவபூஜை செய்வோருக்கு எந்த பயமும் ஏற்படாது. இதயத்தில்

சிவனை தியானிப்போருக்கு எல்லா பாக்யங்களும் - முக்திநிலையும் கூட ஏற்படும். நாமும்கூட சிவபெருமானின் சேவகர்களே - சிவவழி பாடு செய்பவர்களே பாக்யசாலிகள். மாயையால் மயங்கி சிவனை மறந்தோர் உலகில் எந்தப்பயனையும் பெறுவதில்லை. சிவனை வணங்கி நித்ய பூஜை செய்வோரை நாம் வணங்கிவருகிறோம். கலியுகத்தில் 'சிவவழிபாடு மிகப்பெரும் சிறந்த பயன்தரவல்லது. க்ருதயுகத்தில் செய்வதால் எவ்வளவு புண்யம் உண்டோ அதைவிட நூறு மடங்கு பலன் த்ரேதாயுகத்தில் சிவபூஜையால் ஏற்படும். த்ரேதாயுகத்தில் செய்யப்படும் பூஜையின் பலனைப்போல் பதினா யிரம் மடங்கு பலன் துவாபரயுகத்தில் சிவபூஜை செய்வதால் ஏற்படும் துவாபரயுகத்தில் சிவபூஜை செய்வதால் ஏற்படும் பலனைப்போல் கோடி மடங்கு புண்யம் கலியுகத்தில் சிவபூஜை செய்வதால் ஏற்படுகிறது அதிலும் ஜம்பூத் வீபத்தில் அதிலும் பாரதநாட்டில் அதிலும் கும்பகோணத்தில் பிறவி எடுத்தவர்களுக்கு மறுபிறவி ஏற்படுவதில்லை. கும்பகோணத்தில் செய்யப்படும் சிவபூஜையின் பலனைப்போல் நூறு மடங்கு பலன் சிதம்பரத்தில் சிவபூஜையால் அமையும். சிதம்பரத்தலத்தினும் விருத்தாசலத்தில் சிவபூஜை செய்வோர் நூறுமடங்கு பலனைப்பெறுவர். விருத்தாசலத் தில் சிவபூஜை செய்வதால் ஏற்படும் பலனைப்போல் நூறுமடங்கு புண்யம் திருவண்ணாமலையில் சிவபூஜை செய்வதால் ஏற்படும். அப்பலனைவிட அதிக பலன் காஞ்சீதலத்தில் சிவபூஜை செய்வதால் ஏற்படும். காஞ்சீயைவிடவும் ஸ்ரீசைலம் தலம் மிகச்சிறந்தது ஸ்ரீசைலத்தில் சிவபூஜை செய்வதால் ஏற்படும் பயனைப்போல் கோடி மடங்கு புண்யம் காசித்தலததில் சிவபூஜையால் ஏற்படும். அதனைவிட காசியில் உள்ள "அந்தர் கிருஹம்" சிறந்தது. அதனைவிட காசியில் "ஞானவாபீ" பெருமை வாய்ந்தது. அதனைவிட சிவபெருமானுக்குப் பிடித்தமான கைலாயம் மிகமிகச் சிறந்தது. அங்கு எல்லா தேவர்களிலும் மேலான

சிவபெருமான் எல்லா வேதங்களாலும் துதிக்கப்பட்டு ஜோதிமய மான லிங்கவடிவில் இருக்கிறார்.

யாருடைய ஒளியால் சூரியன். சந்திரன், அக்னி, நக்ஷத் திரங்கள் பிரகாசிக்கின்றனவோ அந்த சிவபெருமான் உருவமற்றவர். களங்கமற்றவர் - குணங்கள் அற்றவர். குணங்கள் என்பன - மணம், சுவை, வடிவம், தொடுவுணர்வு, ஒலி, அளவு, பரிமாணம்போன்ற தன்மைகள் ஆகும்) யார் கைலாயம் சென்று சிவனைக்கண்டு கைகளால் தொட்டு பூஜையும் செய்கிறார்களோ அவர்களுடைய பாப பயன்கள் யாவும் முற்றிலும் நீங்கிவிடுகின்றன. அவர் காசிபோன்ற தலங்களில் - பராசக்தியுடன் பல லீலாவிநோதங்களைச்செய்து விளங்குகிறார். ஆதலால் நீங்கள் சிவவழிபாடு செய்தால் சமுத்ர ராஜன் செய்யும் தவத்தால் பயம் ஏதும் ஏற்படாது என்று சொல்ல தேவர்கள் பயம் நீங்கி தத்தம் உறைவிடம் சென்றடைந்தனர். ப்ரம்மதேவன் வைகுண்டம் சென்றார் என்று விபரங்கள் கூறப்படு கின்றன.

16-வது அத்யாயத்தில் — பிரம்மதேவன் வைகுண்டம் சென்றபொழுது திருமாலே முன்வந்து சிவமகிமைபற்றிக் கூறும் முகமாக 'சிவ' நாம மகிமைப்பற்றிக் கூறுவதாவது - முன்பொரு சமயம் ஒரு அந்தணன் சிவசிந்தனையுடன் 'மஹாதேவ, மஹாதேவ' என்று கூறியவாறு வானத்தில் சென்றுகொண்டிருந்தான். அது சமயம் மிகபயங்கரமான மலைபோல் தோற்றம்கொண்ட ஆனால் ஊசியளவு மட்டும் உள்ள வாயுடனும், தொங்கும் செம்பட்டைத் தலைச்சடையுடனும், தீக்கண்களுடனும் ஒரு பூதம் அந்த அந்தணனைத் தொலைவில் வரக்கண்டது. 'சிவ' 'மஹா தேவ' எனும் சொற்களையும் கேட்டது. அந்தணன் அந்த

பைசாச (பூத) வடிவைக்கண்டு பயமேதும் அடையாமல் ' கௌரீ காந்த ! காலகூடவிஷமருந்தி உலகைக்காத்த தேவ, மஹாதேவ என்னை இந்த பயத்திலிருந்து காப்பாற்று '' என்று கூறவே சிவ நாம மகிமையால் பைசாச (பூத) வடிவம் நீங்கப்பெற்று இயல்பான அந்தணர் வடிவம்பெற்று விளங்கியது, மேலும், தனக்கு ஏற்பட்ட கொடிய நிலைக்கு சிவவழிபாடு செய்யாமையும், சிவ நாமாவைக் கேட்காததும் சிவனை வணங்காததும் காரணம் என்று கூறி இன்று உன்னருளால் தீவினைத் தளையிலிருந்து விடுபட்டேன் எனக்கூறி 'சிவ பஞ்சாக்ஷர' மந்த்ரத்தை அவ்வந்தணனிடம் உபதேசம்பெற்றுத் தன்வழியே சென்றான் என்று கூறி மார்க்கண்டே யனின் கதைபோன்றதொரு வரலாறும், அற்பாயுள் உள்ள சிறுவன மேதாவி என்பவன் மிருத்யுஞ்ஜய வழிபாடு செய்தமையால் அவ னுடைய உயிரைக் கவர்வதற்கு வந்த யமதர்மனின் இயலாமை பற்றிக்கூறப்படும் வரலாறும் மேதாவி சிறுவன் 25 எளிய அற்புதமான செய்யுட்களால் துதிப்பதும், (உதாரணம் —

जय विश्वोत्तम श्रीमन् जय भक्तजनप्रिय ।
जय शैवोत्तमाराध्य जय पञ्चमुखानघ'' ।

ஜய விச்வோத்தம ஸ்ரீமன், ஜய பக்தஜனப்ரிய ।
ஜய சைவோத்தம ஆராத்ய, ஜய பஞ்சமுக, அநக ''
ப்ரஸீத - ப்ரஸீத ப்ரபோ அநாத பந்தோ
ப்ரஸீத - ப்ரஸீத ப்ரபோ புண்ய ஸிந்தோ ।
ப்ரஸீத - ப்ரஸீத - ப்ரபோ திவ்ய பந்தோ
ப்ரஸீத ப்ரஸீத ப்ரபோ விச்வஹேதோ ॥)

என்பதுபோன்ற துதிகள் இடம்பெற்றுள்ளன.

17 வது அத்யாயத்தில் — சிவபூஜைக்கான சாதனங்கள் பற்றிக் கூறப்படுகின்றன

காலைக்கடன்களை முடித்துக்கொண்டு சிவத் தியானத்துடன் ஆற்றில் / குளத்தில் தலைமுழுகி நல்ல உடை அணிந்து உடலெங்கும் திருநீறுஅணிந்து, ருத்திராக்ஷமும் அணிந்து - பசு சாணத்தால் சுத்தம் செய்யப்பட்ட இடத்தில் (பூஜை அறையில்) தங்கத்தாலோ வெள்ளியாலோ செம்பினாலோ மண்ணாலோ (புற்றுமண் உயர்ந்ததென்பர்) அமைந்த சிவலிங்கத்திற்கு அபிஷேகத்திற்குரியவும், அர்ச்சனைக்கு உரியவுமான பொருள்களை - வில்வம் சந்தனம (வில்வத்தையும், துளசியையும் எவருமே தலை ஸ்நானம் செய்தபிறகே பறிக்கவேண்டும்) பிறமலர்களை ஸ்நானம் செய்வதற்குமுன் பறிக்கலாம்) முதலானவற்றைத் தயார்செய்து கொண்டு, சிவலிங்கத்தை அபிஷேகம் செய்வதற்கேற்ற பாத்திரத்தில் (இதனை தீர்த்தவலலி என்பர்). சிவலிங்கத்தினை எழச்செய்து பஞ்சாக்ஷர மந்த்ரத்தால் சுத்தஜலம் எடுத்து பூஜை செய்வதற்காக அமரும் இடத்தில் தெளித்து - திருநீறு எடுத்து உடலெங்கும் பூசிக்கொண்டு - வருடம் மாதம் கிழமை திதி நக்ஷத்திரம் முதலான வற்றைக்கூறி சிவனருள் கிட்டவேண்டும் என்பதாக சங்கற்பம் செய்துகொண்டு - முல்லை மலர்போல வெண்ணிறவடிவாக சிவனை தியானம் செய்துகொண்டு - திருநீறு பூசப்பட்ட பாத்திரத்தில் தூய நீரை எடுத்துக்கொண்டு - அதனைக் கையால் மூடியவாறு பஞ்சாக்ஷர மந்த்ரத்தை 10 முறை சொல்லவேண்டும். வேறு மந்த்ரம் தெரிந்திருந்தாலும் அதனைச் சொல்லிவிட்டு முடிவில் பஞ்சாக்ஷரத்தையும் சொல்லியாகவேண்டும்.)

உதாரணமாக :—

ஈசானாய நம: (பஞ்சாக்ஷரம்) பாத்யம் கல்ப்பயாமி

(திருவடிகளை சுத்தம் செய்தல்)

மஹேச்வராய நம (பஞ்சாக்ஷரம்) அர்க்யம் கல்ப்பயாமி

(தாகம் தீர்க்க குடிப்பதற்கான நீர்)

(இங்கு எட்டுவகை அர்க்யம் சொல்லட்பட்டுள்ளது சிறப்பு)

பிருதிவீ விச்வருபேச - பிருதிவீஜனக ப்ரபோ
க்ருஹாண அர்க்கியமிதம் சம்போ ப்ரஸீத - ஸுரஸத்தம ! (1)

(பஞ்சாக்ஷரம்) சம்பவே நம அர்ச்யம் கல்ப்பயாமி
ஜலரூப மஹாதேவ ஜலப்ரபவகாரண !
க்ருஹாண அர்க்யமிதம் சம்போ - ப்ரஸீத - ஸுரஸித்தம ! (2)

(பஞ்சாக்ஷரம்) மஹாதேவாய நம: அர்க்யம் கல்ப்பயாமி
தேஜோருப மஹேசான தேஜோஜனக சங்கர !
க்ருஹாண அர்க்யமிதம் சம்போ - ப்ரஸீத - ஸுரஸித்தம ! (3)
(பஞ்சாக்ஷரம்) சங்கராய நம: அர்க்யம் கல்ப்பயாமி

இவ்விதம் — வாயு, ஆகாயம், ஸூர்ய, சந்திர, யஜமானன் என்ற எட்டு வடிவாயுள்ள ஈச்வரனுக்கு எட்டுவகை அர்க்யம் பாவனை யாக அர்ப்பணம் செய்யவேண்டும். இவற்றை அளிக்கும் நீரில் பூவை, அக்ஷதை, வில்வ இதழ் இவற்றையும் சேர்த்து அளித்தல்

---

கல்ப்பயாமி = மண், நீர், நெருப்பு, காற்று, வானம், சூரியன் சந்திரன் யஜமானன் எனும் எட்டு வடிவாக உலகையே வடிவமாகக்கொண்ட தெய்வத்திற்கு நாம் நேரிடையாக எதையும் சமர்ப்பிக்க இயலாது. நமது சக்திக்கு உகந்த அளவில் பாவனையாகத்தான் பூஜை செய்ய இயலும். பழக்கத்தால் நம்மைப்போல் மனித வடிவமாகவே தெய்வத்தை மனதால் பாவனை செய்துகொண்டு கால்களை அலம்புவதாகவும் நீர் அருந்தக்கொடுப்பதாகவும் மனதால் பாவனையாகத்தான் வழிபாடு செய்ய இயலும் என்பதால் கல்ப்பயாமி "கற்பனை யாக பாவனையாக அளிக்கிறேன் என்று பொருள்.

வேண்டும். பின்னர் அபிஷேகம். முதலில் சுத்த ஜலத்தால் அபிஷேகம், பிறகு ஐந்து அமிருதங்களால் - பஞ்சாமிர்தம் என்பது இக்காலத்தில் வழங்கப்படும் பொருள் அல்ல. பசும்பால், பசு நெய், புதியதேன், பசுந்தயிர், குழவுஜீனி அல்லது நாட்டுச் சர்க்கரை இவ்வைந்தையும் கலந்து அல்லது தனித்தனியாக அபிஷேகம் - மறுபடி சுத்தஜலத்தால் அபிஷேகம், பிறகு சுத்தமான பசும்பால் அபிஷேகம், சிறிது தூய்மையான நீர் கலந்து பாலை அபிஷேகம் செய்யும்படி இங்கு கூறப்படுகிறது பிறகு பசும் தயிர் சுத்தமானதாகத் தயார்செய்யப்பட்டதை அபிஷேகம் செய்து, பிறகு பசுநெய்யால் அபிஷேகம், பிறகு தூய புதிய தேன் அபிஷேகம் - நாட்டுச் சர்க்கரை அல்லது குழவுஜீனியை சுத்தநீரில் கலந்து அபிஷேகம். இந்த ஐந்து அமிர்தங்களை அபிஷேகம் செய்யும்பொழுது ஒவ்வொன்றுக்கும் இடையில் தூய நீரால் அபிஷேகம் செய்யப்படவேண்டும். பின்னர் தாரையாக இடையறாத தாரையாகத் தூய நீரால் அபிஷேகம் செய்யப்பட்டு வில்வ இதழ்கள் பரப்பப்பட்ட தங்கமயமான (வசதியிருந்தால்) ஆசனத்தில் (பீடத்தில்) ஈச்வரனை இருககச்செய்து தூய ஆடையால் சுற்றி - சுத்தமான திருநீற்றினை அர்ப்பணம் செய்ய வேண்டும். பிறகு நறுமணம் கமழும் சந்தனம் சமர்ப்பிக்க வேண்டும். இவற்றைப் பஞ்சாக்ஷர மந்த்ரத்தால் சமர்ப்பித்து ஒவ்வொரு உபசாரத்திற்குப் பிறகும் ஆசமனம் அளிக்கப் படவேண்டும் வெள்ளை எள் கலந்த அக்ஷதைகளாலும் அதன் பிறகு சுத்தமான மூன்று இதழ்கள் உள்ள வில்வ தளங்களாலும் அர்ச்சனை செய்ய வேண்டும்

बिल्वपत्रं गृहाणेश बिल्वपत्रप्रिय प्रभो ।
प्रसीद भगवन् शम्भो पातकानि हरस्व मे ॥

பில்வபத்ரம் க்ருஹாண ஈச பில்வபத்ரப்ரிய ப்ரபோ !
ப்ரஸீத பகவன் சம்போ பாதகானி ஹரஸ்வ மே ||

(வில்வபத்ரங்களில் அதிகம் ஈடுபாடு கொண்ட பிரபோ அருள் புரியவேண்டும், இந்த பில்வ இதழ்களை ஏற்கவேண்டும், என் பாவங்களையும் போக்குங்கள் என்று பாவனைசெய்து சமர்ப்பிக்க வேண்டும். பிறகு நறுமணமுள்ள நெய் - அகில் கலந்த புகை தீபம், நிவேதனம், தாம்பூலம் 11 அல்லது 12 பிரதக்ஷிணம் - நடனம் பிறகு உரியநியாஸ - தியானத்துடன் பஞ்சாக்ஷர ஜபம் (1008 முறை) பிறகு பில்வம் பல்வேறு புஷ்பங்களாலும் மறுபடி பூஜை - ஸ்தோத்ரங்கள் சொல்லித் துதிக்கவேண்டும் பிறகு வெண குடை, வெண்சாமரம், முகம் பார்க்கும் கண்ணாடி எல்லாவற்றையும் சமர்ப்பித்து - குறையிருப்பின் மன்னிக்க என்று பிரார்த்திக்கவேண்டும். பிறகுமறுபடி ஈச்வரனைத் தொட்டு 108 முறை ஆறெழுந்து மந்த்ரத்தை ஜபம் செய்யவேண்டும். (ப்ரணவம் கலவாத மந்த்ரம் பஞ்சாக்ஷரம் அத்துடன் ப்ரணவம் சேர்த்தால் ஆறெழுத்து ஆகும்). சிவ பூஜை செய்யாமல் நீர்கூட அருந்தலாகாது (அவ்வாறு செய்தால் நீரில்லாத பாலைவனத்தில் சுற்றி அலையநேரிடும்) ஆனால் கலியுகத்தில் இவ்வாறு தினந்தோறும் சிவபூஜை செய்வதில் ஈடுபாடு ஒருவருக்கும் ஏற்படுவதில்லை. இவ்வாறு நித்ய பூஜை செய்வதால் அந்த சாதகனை உயர்நிலைபெற சிவபெருமான் அருள் புரிகிறார் என்றவாறு கூறப்பட்டுள்ளது.

**18:**வது அத்யாயத்தில் — இதில் சிவபெருமான் பார்வதியிடம் - சிவபக்தியின் பெருமைபற்றியும் சிவத்துரோகத் தினால் கொடிய துன்பம் அனுபவிக்கப்படவேண்டும் என்றும் கூறி உதாரணமாகச் (சான்றாக) சில கதைகளைக் கூறுகிறார். "ஒருசமயம் சுவர்க்கலோகத்தில் ப்ரஹஸ்பதி இந்திரனிடம் - இந்திர ! நான் பூவுலகத்தில் பல புண்ணியத் தலங்களைக்

கண்டு மிகவும் மகிழ்ச்சியுற்றிருக்கிறேன். அங்கு ஒரு பக்தன் வில்வ இலைகளைப் பறித்து சிவபூஜை செய்து சிவனைப் பலவாறு துதித்தான் அவனைக்கண்ட மற்றொரு அந்தணர் ''மிகுந்த சிரத்தையுடன் நீ என்னசெய்துகொண்டிருக்கிறாய்? எனக்கேட்டான் சிவபூஜை செய்தவர் - '' ஐயா, சிவபூஜை செய்து கொண்டிருக்கிறேன் '' எனக்கூற - அதுகேட்ட அந்தணன் சிவன் எப்படி ஒரு தேவனோ அவ்விதமே மற்றும் பல தெய்வங்களும் உண்டு தேவர்களுக்குள் ஏற்றத்தாழ்வு எதுவும் கிடையாது என்று கூறினான் அதுகேட்டு கோபங்கொண்ட சிவபூஜை செய்தவன் சிவநிந்தனைசெய்த அந்த அந்தணனைக் கொன்றுவிட்டான். யம தூதர்கள் இறந்த அந்தணனை யமனுடைய சமீபம் இழுத்துச் செல்ல வந்தனர். இவ்விடத்தில் உனக்கு ஒன்று சொல்லவேண்டும் யமனுடைய நகரம் செல்வோம் வா அங்கு காணவேண்டியது உண்டு எனக்கூற இருவரும் யமாலயம் சென்றனர். யமதர்மன் அவர்களை வரவேற்று உபசரித்தான். அதேசமயம் யமனுடைய சன்னிதிக்கு யமதூதர்கள் சிவநிந்தனைசெய்தமையால் கொல்லப் பட்ட அந்தணனை சூலத்தால் குத்தியவாறு இழுத்து வந்தனர்.

அவனைக்கண்ட யமன் சித்ரகுப்தனை நோக்கி இவன் செய்த செயல்கள் யாவை? எனக்கேட்க சித்ரகுப்தன் தர்மராஜ! இவன் சிவத்வேஷி - அதுகேட்ட கொடிய யமன் அப்படியா! எனக்கூறி கோபத்தால் சிவந்த கண்களுடன், சூலத்தை எடுத்து சிவநிந்தனைசெய்த அவ்வந்தணனை அடித் தான். பிறகு ஒரே அடியில் நூறுபேரைக் கொல்லக்கூடிய சதக்னீ (இதை இந்த காலத்திய கருத்தின்படி ராக்கெட், பீரங்கி போன்ற ஆயுதமாகக் கருதலாம்.) வால்மீகியின் ஸ்ரீமத்ராமாயணத் திலும் அயோத்தியின் மதில் சுவர்களில் நூற்றுக்கணக்கான '' சதக்னீ '' ஆயுதம் நிறுவப்படடிருந்ததாகக் கூறப்பட்டுள்ளது.

எனவே "சதக்னீ" என்பதற்கு இக்காலததில் பிரங்கி போன்ற ஆயுதம் எனப் பொருள் கொள்ளலாம்) ஆயுதத்தால் அடித்தான். நன்கு பழுக்கக் காய்ச்சப்பட்ட இரும்பு உருண்டைகளால் அவனை அடித்தான் இவ்வாறு துன்புறுத்தப்பட்ட அந்த அந்தணனை யும் யமனையும் பார்த்த தேவேந்திரன் பயத்தால் வெலவெலத்துப் போனான். அவன் யமனிடம் மெதுவாகக் கேட்டான் தண்டனை என்பது இவ்வளவுதானா! வேறு சில வகைப்பட்ட தண்டனை களும் உண்டா? எனக்கேட்டதும் யமன், தேவகுரு தேவேந்திரன் ஆகியவர்களிடம் கூறினான் சிவாபராதம் செய்தவர்களுக்கு கல்பகாலம் வரையில் கொடிய தண்டனை உண்டு சிவனைக் குறை சொல்பவர் மனிதனாக இருபபினும். தேவனாக இருப் பினும் அவன் விஷயத்தில் கொடிய தண்டனை உணடு. நான் சிவபெருமானின் சேவகன் தண்டனை இவனுக்குமட்டுமில்லை. இவனுடைய பெற்றோர் (முன்னோர்கள்) தம் தர்மச்செயல் செயல்களின்பயனாக இப்பொழுது சுவர்க்கத்தில் உள்ளனர். அவர் களையும் இங்கு இழுத்துவந்து தண்டனை கொடுக்கவேண்டும். இவன் ஒருவன்செய்த சிவாபசாரம் சுவர்கத்திலுள்ள இவனுடைய முன்னோர் களையும் நரகத் தண்டனைபெறச் செய்துவிட்டது இந்திரனாக உபேந்திரனாக (திருமாலாகவே) இருப்பினும், சந்திரனாக இருப் பினும் சிவ அபசாரம், சிவனைக் குறைசொல்வோரை சிவனும் மற்ற தேவர்கள் போன்ற ஒருவரே என்று இகழ்ந்து பேசுபவர்களை நன்கு கொதித்துச் சிவந்துள்ள தீப்பிழம்புடன் உள்ள குண்டங்களில் குழிகளில் தள்ளியும், கொடிய கிருமிகள் உள்ள குண்டங்களில் தள்ளியும் துயரங்களை அனுபவிக்கச்செய்யவேண்டும்!

இது இருக்கட்டும், அங்கு பாருங்கள், மன்மதன் சிவனை யும் மற்ற தேவர்களுக்கு ஈடாக நினைத்ததன் பயனாக கொடிய தீக்குழியில் தள்ளப்பட்டுத் துயரப்படுக் கொண்டிருக்கிறான்.

மன்மதன் நரகத்தில் துயரப்படுவதை அறிந்த மஹாலக்ஷ்மி தாய்க்குரிய இரக்கம் மிகுந்தவளாகத் திருமாலிடம் மன்மதனை நரகத்திலிருந்து விடுவிக்கச் செய்யலாகாதா எனக்கேட்க, திருமால் கவலைப் பட்டுக்கொண்டிருக்காதே மன்மதன் சிவபெருமானையும் எங்களைப் போன்ற ஒருவனாக நினைத்து அபசாரம் செய்துவிட்டான். அவன் அத்துயரங்களை அனுபவிக்கவேண்டியவனே. சிவ அபராதம் செய்தவர்கள் இயமன் கையில் சிக்கிவிட்டால் மீளவே முடியாது. நான் சொல்லிவிட்டால் யமன் மன்மதனை விடுவித்து விடுவானா ! பிள்ளையாயினும் சிவநிந்தை செய்தால் தண்டனைக்கு உட்படவேண்டியதுதான். நான் அவனை விடுவிக்கச் சென்றால் நானும் அவனுடன் சேர்ந்து தண்டனை பெறவேண்டிய நிலை ஏற்படடுவிடும். சிவநிந்தனை செய்தவனுக்கு நன்மை செய்ய முற்படுகிறவனும்கூட சிவநிந்தனை செய்தவனாகவே கருதப்படுவான். ஆகையால் மன்மதனை விடுவிப்பதற்காகச் செய்யப்படும் முயற்சிகள் யாவும் பயனற்றவையே எனக்கூறி அதற்குச் சான்றாக மித்ரராட் எனற பெயர்கொண்ட அரசன் காமவயப்பட்டு பிரதோஷ காலத்தில் (சிவ பூஜைக்குரிய நேரத்தில்) தன் மனைவியை புறக்கணித்து ஒரு தேவலோகப் பெண்ணிடம் மோகம்கொண்டு அணுகியபொழுது அப்பெண் அவனுக்குப் பலவாறு புத்திமதிகள் கூறி அவனுடைய மனதை மாற்றி நல்வழிப்படுத்த முயற்சிசெய்த வரலாற்றினை எடுத்துக் கூறினார் என்றவாறு விரிவாகக் கூறியதாகக் கூறப்பட்டுள்ளது.

**19-வது அத்யாயத்தில்** — இதில் காளஹஸ்தி தலத்தில் தத்தம் விருப்பப்படி சிவபூஜை செய்த சர்ப்பம் / யானை இருவருடைய வரலாற்றைக் கூறி, "கண்ணப்பன்" என்று பெயரைக் குறிப்பிடாமல் "வேடன்" வனத்திடையே சிவலிங்கத்திற்குத் தன் வழிப்படி பூஜை செய்த வரலாறு, அதே

லிங்கத்தை வேதவிதிப்படி பூஜை செய்துவந்த முனிவர்கள் சிவலிங்கத்தினருகே மாமிசம் முதலானவற்றைப் பார்த்துவிட்டு வேதனையும் கோபமும் கொள்ளுதல் இவ்வாறு பல நாட்கள் இரு விதமாக சிவபூஜை நிகழ்ச்சிகள் நடநதுவந்துள்ள நிலையில், முனிவர்கள் மறைந்திருந்து வேடன் பூஜைசெய்யும் முறையைக் கண்டனர். அந்நாளில் முனிவர்களுக்கு அவ்வேடனின் சிவ பக்தியை சிவபெருமானே உணர்த்தினார். சிவலிங்கத்தின் ஒரு கண்ணிலிருந்து ரத்தம் வந்ததைக்கண்ட வேடன் தன் ஒரு கண்ணைப் பிடுங்கி சிவனுக்கு அர்ப்பணித்த உயர்வான பக்தி நிலையைக்கண்டு முனிவர்கள் வியந்துநிற்க, சிவனுடைய மற்றும் ஒரு கண்ணிலிருநது ரத்தம் வழிவதைக்கண்டு மனம்பொறுக்காத வேடன் தனது மற்றொரு கண்ணையும் பிடுங்கி சிவனுடைய அக்கண்ணிருக்கும் இடத்தில் வைத்த விதம்கண்ட முனிவர்கள் மிகுந்த அன்புடன் வேடனைப் பாராட்டி மகிழ்ந்த வரலாறும் கூறப்படுகிறது

இவ்வாறு 19-வது அத்யாயம் முடியவுள்ள - பகுதி சிவ ரஹஸ்யம் 7-வது அம்சத்தின் இரண்டாவது பகுதியாக வெளியிடப் படுகிறது.

இந்த நூலில் எழுத்துப் பிழைகள் - சொற்பிழைகள் - இலக் கணப் பிழைகள் இல்லாமல் இல்லை. இதிஹாச புராண நூல் களில் திருத்தம் தேவைப்படும் சொற்பிரயோகங்கள் உண்டு. அவைகளுக்கு விதிவிலக்கு உண்டு. அது ஆர்ஷ ப்ரயோகம் (आर्षः प्रयोगः) என்று சொல்லப்படும். அதுபோலவே இதுவும் பழைய நூலாகக் கருதப்படவேண்டும் என்ற எண்ணம் இந்த நூலாசிரியருக்கும் இருந்திருக்கிறது. ஆனால் திருத்தம் செய்யப் படத்தேவையில்லாமலேயே பொருள்கொள்ள இயலுவதால் திருத்தம் செய்யப்படாமலேயே விடப்பட்டுள்ளது.

இவ்வரியநூலை அச்சிட்டு வெளியிட அனுமதி வழங்கிய நூலக இயக்குநரும் தஞ்சை மாவட்ட ஆட்சியாளருமான திரு. **வி. கு. ஜெயக்கொடி, இ. ஆ. ப.,** அவர்களுக்கு என் மனமார்ந்த நன்றியினைத் தெரிவித்துக்கொள்கிறேன்

இவ்விஷயத்தில் எனக்கு ஊக்கமும் உற்சாகமும் அளித்து உதவிய நூலக நிர்வாக அலுவலர் திரு **ப. சுப்பிரமணியன்** அவர்களுக்கும், நூலக நூற்பதிப்பு மேலாளர் திரு. **A. பஞ்சநாதன்** M. A., M. L. I. S., அவர்களுக்கும் எனது மனம்நிறைந்த நன்றியைத் தெரிவித்துக்கொள்கிறேன்.

இந்நூலின் இப்பகுதியைச் சிறப்பாக அச்சிட்டளித்த தஞ்சை ஸ்டார் பிரிண்ட & பேக் நிறுவனத்தினருக்கு எனது பாராட்டுக்கள்

பண்டிட் **S. கிருஷ்ணமூர்த்தி சாஸ்த்திரிகள்,**
மேநிலை சம்ஸ்க்ருத பண்டிட்,
சரஸ்வதி மஹால் நூலகம்.

தஞ்சாவூர்,
01 - 03 - 97



# வேண்டுகோள்

கருணையுள்ளங்கொண்ட நம் முன்னோர்கள், அரிய பெரிய இலக்கியங்களையும், பிறவற்றையும், பனையோலைகளில் எழுதிச் சுவடிகளாக நமக்குத் தந்தனர். அவை, பல்வேறு இடங்களில் முடங்கி உள்ளன. சுவடிகள் பழுதடைவதற்குமுன் சரசுவதி மகாலுக்கு அன்பளிப்பாகக் கொடுத்துதவினால், அவை மக்களுக்குப் பயன்படும்.

மகாலுக்குக் கொடுப்பதன் மூலம், சுவடி தந்தவர்களும், சுவடி எழுதியோரும் அழியாப் புகழைப் பெருமைசால் சரசுவதி மகால் உள்ளளவும் பெறுவர். அவை பதிப்பாகி வருமாயின் சுவடி தந்தார் பெயர் இடம் பெறுவதோடு, அப்பதிப்பில் ஐந்து பிரதிகளும் பெறுவர்.

எனவே "நாம் பெற்ற பேறு பெறுக இவ்வையகம்" என்ற எண்ணமுடைய நற்பண்பாளர்கள் தம்மிடமுள்ள சுவடிகளைச் சரசுவதி மகாலுக்குத் தந்துதவ வேண்டுகிறேன்.

தஞ்சாவூர்
07-09-96

**மாவட்ட ஆட்சியர் மற்றும் இயக்குநர்,**
**சரசுவதி மகால் நூலகம்.**

## सप्तमांश-द्वितीयभागोक्त-

# ॥ विषयसङ्ग्रहः ॥



**त्रयोदशेऽध्याये** – शौनकादिमुनीनां शिवतत्वोपदेश-व्याजेन काशीक्षेत्रप्रभावं वर्णितवते सूतमुनये कृतज्ञता-निवेदनम् - तेषां महर्षीणां काशीक्षेत्रविषयिणीं श्रद्धां विदित्वा सूतेन सोत्साहं पुनः शिवोत्कर्षकथनप्रसङ्गात् भस्मरुद्राक्षधारणस्य शिवभक्तजनाऽऽराधनस्य शिवाय साष्टाङ्गप्रणिपातस्य च शिवप्रसादजनकत्व - काशीक्षेत्र-प्राप्तिसाधनत्वोक्तिः, तत्प्रसङ्गात् काश्यप - कण्वसंवादः, संवादमध्ये रुद्राक्षाणां वैविध्यकथनं, ततश्च शिवार्धाङ्गभाग-लिप्सया तपश्चरन्त्या गौर्याः समीपे विष्णोः समागमः, तेन च शिवाष्टोत्तरशतनामवर्णनं, तत्प्रसङ्गात् शिवभक्तस्य पुष्पदन्तस्य तपश्चर्यया प्रमुदितस्य शिवस्य तत्पुरतः प्रादुर्भावकथनं, पुष्पदन्तकृत**शिवमहिम्नः**स्तोत्रकथनं ततश्च, काश्यपकण्वसंवादप्रसङ्गे देवानां सोमवारपूजाऽकरणेन लक्ष्म्याः कल्पवृक्षादीनां च तिरोधानकथनं अगस्त्य-

चोदनया देवानां सोमावारे शिवपूजनं समुद्र-मथनोद्योगश्च समुद्रात् हालाहलविषोत्पत्तिः विष्णु-ब्रह्मादीनां पलायनं, पार्वतीप्रेरणया ईश्वरेण लीलया काल-कूटविषग्रहणं, ततश्च सन्तुष्टदेवानां ईश्वरस्तुतिः, पुनः समुद्रमथनेन लक्ष्म्यादिप्रादुर्भावः, काश्यपेन कण्वं प्रति हिमवन्नारदसंवादकथनं, काशीक्षेत्रमहिमाविष्करणं च, प्रसङ्गात् शतर्चनकृततपःप्रभावेण ईश्वरस्य तत्पुरतः आविर्भावः, शतर्चनकृता ईश्वरस्तुतिः, ईश्वरकृपाप्राप्तजीव-न्मुक्तेरपि शतर्चनस्य पुनः तपसि प्रवृत्तिः ॥ काश्यपेन संवादप्रसङ्गात् कण्वाय विष्णुब्रह्मादीनां शिवध्यानपर-ओङ्कारदर्शनम् ओङ्कारेण शिवध्यानमात्रस्य मोक्षार्थ-प्रदत्वकथनम्

**शिवे मदर्चनं ध्यानं मन्नाम्नामनुकीर्तनम् ।**

**मदिष्टक्षेत्रवासश्च मुक्तिसाधनमक्षतम् ॥** इति

श्रीशिवेन स्वयं पार्वत्यै कथितस्य अनुवादनं - ईश्वर-प्रोक्तवैदिकशब्दार्थनिर्वचनम् - ततश्च गौतमप्रोक्तशिव-धर्मश्रवणेन प्रीतस्य कण्वस्य बहुभिर्मुनिवरैः साकं तपसि प्रवृत्तिः ॥

चतुर्दशोऽध्याये -

"नैमिशारण्यवासिमुनीनां भास्करं शिवपूजापरायणं दृष्ट्वा-" भानुदेव, असारेऽस्मिन् संसारे सारबुद्धिः कुतो जायते, असारे सांसारिकविषये अनास्था अवश्यं भावितव्या, किं तु सा न जायते। तत्र असारबुद्धिः कथं वा जायेत, तत्वज्ञानोत्पत्तेः किं वा निदानम्। किंदैवतध्यानप्रभावेण तत्वज्ञानं भवेत् इति ब्रूही"तिकृत प्रश्नस्य भानुकृतं विवरणम् - श्रूयतां - पुरा ईश्वरः "योगरतं स्कन्दं दृष्ट्वाऽऽयाहीति प्रेषितः नन्दिकेश्वरः कैलासात् प्रस्थाय मध्येमार्गं काश्यां शिवगङ्गतीर्थे कृतावगाहः ततश्च मणिकर्णिकां गत्वा स्नात्वा कृतभस्मोद्धूलनः धृतरुद्राक्षाभरणश्च - "प्राप्ता काशी पुण्यलभ्या महेशकृपयेति" प्रमुदितः मणिकर्णीजलं त्रिः पीत्वा (आचम्य) "एतद्धि धिक्कृतामृतं पयः" इति मन्यमानः हेमकुम्भेन मणिकर्णीजलमादाय श्रीमद्विश्वेश्वरं द्रष्टुं गतः, पुनश्च ज्ञानवाप्यां स्नात्वा भस्मोद्धूलन - रुद्राक्षधारणादिकं कृत्वा द्रष्टव्यदिव्यमूर्तिदर्शनं कृत्वा मुक्तिमण्टपं प्रविश्य परमानन्दतुन्दिलमानसः ज्योतीरूपं विश्वेश्वरं विविधपवित्रद्रव्यैः अभिषिच्य रत्नादिभिः बिल्वपत्रादिभिश्च पूजयामास। भगवते

धूपदीप - निवेदनादिकं कृत्वा प्रदक्षिणादिकं च कृत्वा षडक्षरं जजाप ॥ ततश्च अवशिष्टकर्तव्यकृत्यं कृत्वा भगवद्वचनं स्मरन् श्रीशैलशिखरमागतः स्कन्दं पश्यति स्म । ननाम च ॥ षण्मुखोऽपि तं नन्दिकेश्वरं स्वागतकुशलादिकं पृष्ट्वा "शिवैकशरणस्याद्य तवाभूद्दर्शनं मम । शिवभक्तस्वरूपेण शिवः सञ्चरते स्वय"मिति शिवभक्तिवैभवकथनं तत्प्रसङ्गात् च तपोदानव्रतानुष्ठानमहाभाग्यवशादेव शैवी श्रद्धा भवेदिति प्रोवाच । नन्दिकेश्वरोऽपि "स्कन्द, सत्यं, सत्यं एतत्, भववदुक्तं सर्वं वेदोदितमेवेति प्रशंसन् "वद क्षेत्रस्य महात्म्यमि"ति षण्मुखं प्रार्थयते स्म ।

ततः स्कन्दकृतं श्रीशैलक्षेत्रमाहात्म्यवर्णनं, तत्प्रसङ्गात् कपिलकण्वगर्गात्रिमुख्यमहर्षिकृततपोवर्णनं - अत्रिकृतं

[1]"**नमो नमस्ते विधिजन्महेतो**

**नमो नमस्ते विधिमूर्धहर्तः ।**

---

1. एतत्तोत्रविमर्शनेन ग्रन्थोऽयं परशिवरहस्योद्घाटनायैव प्रवर्तत इति वक्तुं शक्यते । न तु त्रिमूर्त्तिमध्यगतस्यहरस्य वैशिष्टयप्रकाशनाय ।

**नमो नमस्ते हरजन्महेतो**

**नमो नमस्ते हरहरतृमूर्ते ॥"** इत्यादि परमपवित्रस्तोत्रवर्णनं -

अत्रिकृतस्तोत्रश्रवणेन मुदितस्येश्वरस्य तत्पुरतः आविर्भावः, शिवदर्शनतुष्टस्य अत्रेः पुनः

**"मच्चित्तभ्रमरो नित्यमस्मिंस्त्वत्पदपङ्कजे ।**

**यथा तिष्ठति देवेश तथा कुरु महेश्वर ।**

अस्य देहस्यावसाने मोक्षपात्रं कुरुष्व मामिति प्रार्थनया तुष्टेन ईश्वरेण सर्वसुराराध्यः पुत्रस्ते भवतात् इत्यनुगृहीतस्य अत्रिमहर्षेः पुत्रस्य चन्द्रस्योत्पत्तिः (अत्रेः दुर्वासाः दत्तात्रेय इति द्वावन्यावपि जातौ इत्यस्ति वस्त्वन्तरम्) ईशकृपया जातपुत्रस्यात्रेः महर्षिकृता प्रशंसा - अत्रेरपि - शिवान्नास्त्यधिको देवः, "शङ्करस्य प्रसादेन ज्ञानं भवति धीमताम् - सेव्यः पूज्यः सदा साम्बः समेषां अप्रमादतः" इति कृतज्ञतापूर्विका शिवस्तुतिः, ततश्च देवदारुवनाश्रितविप्रस्य तच्चित्तस्थैर्यजिज्ञासुशैवस्य च संवादप्रसङ्गात् शिववैभव प्रकाशनं,

**अपाणिपादो जवनो गृहीता**

**पश्यत्यचक्षुः स शृणोत्यकर्णः ।**

स वेत्ति सर्वं न च तस्यास्ति वेत्ता[1]
तमाहुरग्र्यं पुरुषं महान्तम् ।
अणोरणीयान् महतो महीयान्
आत्मा गुहायां निहितोऽस्य जन्तोः ॥

तमक्रतुं पश्यति वीतशोकः
धातुः प्रसादान्महिमानमीशम् ॥

इत्यादि शैवकृतश्रुतिसिद्धवर्णनं, तत्प्रसङ्गात् अशैवदक्षकृतः यागारम्भः, तद्दर्शनाय सतीसमागमः देवकृता सतीस्तुतिः, (सती दक्षपुत्री शिवं परिणिनायेति वार्ता प्रसिद्धैव ॥) तत्र सतीपरिभवः, क्रुद्धस्य परमशिवभक्तस्य दक्षनिन्दापरं वचनं भर्त्सनं च सत्याः कैलासगमनोद्योगः क्रुद्धप्रमथवचनं,

"यामाहुः परमां विद्यां परब्रह्मस्वरूपिणीम् ।

तदवज्ञाग्निना दक्ष तव नाशो भविष्यति" इत्यादि-विष्णुकृतबहुविधप्रबोधवचनं - शिवद्वेष्ट्रा दक्षेण कृतां सतीपरिभववार्तां शिवनिन्दापरां च श्रुत्वा क्रुद्धेन ईश्वरेण कृता वीरभद्रसृष्टिः, वीरभद्र - शिव संवादान्ते दक्षाध्वर-ध्वंसनाय दक्षभस्मसात्करणाय च ईश्वरकृता आज्ञा रुद्रक्रोधाग्नि - सम्भूतेन वीरभद्रेण दक्षाध्वरप्रध्वंसनं

---

1. उपदेष्टा बोधकः इत्यर्थे ।

हरिं दृष्ट्वा - को वा त्वमसि, को वा ते रक्षकोऽस्ति जगत्त्रये" इत्याद्युक्त्वा त्रिशूलेन हरिं विदार्य तस्य भूपृष्ठे निपातनं, दक्षसंहारश्च, ईश्वरेण स्वेच्छया यस्मै कस्मैचिद् वैकुण्ठाधिपत्यप्रदानं, यस्मै कस्मैचिच्च ब्रह्मेन्द्रत्वादिप्रदानं - एवं-रीत्या शिवेन दक्षाध्वरे भागग्रहणायागतसर्वदेवताशिक्षण तेषां पलायनं च, कदाचित् तारकशूरपद्मसिह्ममुखादिदैत्यवर्गभयात् अत्यन्तभयभीतानां वरुणादीनां सन्निधौ का वास्ति भवतां शक्तिः इति वरुणादिदिक्पालकानुद्दिश्य इन्द्रकृतः प्रश्नः, तत्प्रसङ्गात् मन्मथेन "मच्छस्त्राणां गतिः क्वापि एतावता नैव प्रतिहता, मच्छस्त्रेण ईषणात्रयरहितानामपि मुनीनां कामवशानुगत्वकथनं लोकत्रयमपि जेतुं समर्थोऽहमित्युक्त्वात्मप्रतापाऽऽविष्करणं, ततश्च तपोनिष्ठे ईश्वरे कृतचेष्टस्य मन्मथस्य ईशनेत्राग्निना भस्मसात्करणं, शिवप्रभाववर्णनश्रवणेन सन्तुष्टः स्मृतसर्वेश्वराज्ञः नन्दी स्कन्दाय भगवत्प्रोक्तवृत्तान्तं कथयति, तत्प्रसङ्गात् नन्दिकेश्वरस्य काशीसन्दर्शनमणिकर्णिकाज्ञानवापीमुख्यतीर्थप्रभाववर्णनं, स्वानुष्ठितविश्वेश्वराभिषेकपूजाक्षेत्रप्रदक्षिणादिकथनं ततश्च तच्छ्रवणप्रमुदितानामृषीणां श्रीशैलाय प्रस्थानं च वर्णितम् ॥

**पञ्चदशाध्याये:**

शिवपूजाविधानाय साधनानि कानि? कथं वा पूजा विधेया? इति पार्वतीकृतप्रश्नस्य ईश्वरवर्णितवृत्तान्तप्रकाशनं, पुरा नन्दिकेश्वरेण एवमेव प्रश्नः कृत: तस्मै यदुक्तं तत्ते कथयामि इत्यारभ्य ईश्वरकथितनानावृत्तान्तवर्णनं -

**यस्य नास्ति गृहे नित्यं शिवलिङ्गार्चनं शिवे ।**
**तत्सत्यं कर्मचण्डालगृहमेव न संशय: ।।**

**चण्डालोऽपि वर: सत्यं न शिवानर्चको द्विज: ।**
**शिवलिङ्गार्चनं नित्यं यस्त्यजेदविवेकत: ।**
**स याति नरकं घोरं यावदाचन्द्रतारकम् ।।** इति शिवपूजाया अवश्यकर्तव्यत्ववर्णनं, "सर्वेभ्य एव देवेभ्य यतोऽस्मि सुमहानहम् । अत एव महादेव: प्रथितो निगमेष्वहम् - यं यमुद्दिश्य कर्माणि करिष्यन्ति फलेप्सव: । तानि कर्माणि मय्येव प्रविशन्ति फलप्रदे" इति ईश्वरस्यैव सर्वकर्मफलप्रदानाधिकारकथनं तत्प्रसङ्गात् विष्णुमुद्दिश्य कठिनं तपश्चरत: जलाकरस्य तप:प्रभावभीतानां देवानां ब्रह्मसमीपगमनं, न भेतव्यं इति वदन् भयप्रदमपि भयहरं ईश्वरमेव भजत, मोहवशगाः केचित् अनीश्वरं भजन्ति । तेषां कदापि मङ्गलं न भवेत्

